# Contents

**1**

# முன்னுரை

கவிதைகள் என்னை பள்ளிப்பருவத்தில் இருந்தே ஒரு பெண் போல ஈர்த்தவை . ஆனால் என் காதலோ கட்டுரைகள் , சிறுகதைகள் மீதானது .

முதன்முதலில் சரியாக மீசை அரும்பிய பருவம் . காதலில் நான் . காதலியாக அவள் . சொல்ல துணிவில்லை . அதனால் காகிதங்களிடம் காதல் சொன்னேன் அது சுமார் ஒரு 250 கவிதைகள் அடங்கிய தொகுப்பு . ஆனால் கட்டுரைகளின் பொறாமையால் அந்த முதல் கையெழுத்து கவிதை தொகுப்பு தொலைந்துபோனது அந்த முதல் காதலுடன் .

இப்படி எளிதாக இருக்கும் போது கட்டுரைகளை விட கவிதை அழகானதாகிறது . நான் கவிதை எழுதுகிறேன் என நினைக்கும் போது எனக்கு முன்னே இருக்கும் பல கோடி கவிஞர்களை நினைத்து பொறாமை அடைகிறேன் . தமிழ் பல பரிணாம வளர்ச்சியை பெற்றுள்ளது . இது தான் வடிவம் . இப்படி தான் இருக்க வேண்டும் என்பதெல்லாம் ஓடிப்போனது .

எனது பாணியில் கவிதைக்கு வடிவம் கிடையாது ஏதோவும் ஏதாவதுமாக எழுதிவிட்டேன் . நீங்கள் படிக்கும் போது ஏதாவது நினைவுகளை இந்த ஏதோ கவிதைகள் உருவாக்கினால் அது என் எழுத்துக்களின் வெற்றி .

இன்னும் எழுதுவேன் என்ற நம்பிக்கையுடன்

நேதாஜிதாசன்

*suryavn97@yahoo.com*

*twitter.com/surya_vn*



# ஏதோவும் ஏதாவதும்



நேதாஜிதாசன்

கவிதைகள்

1

# அரைகுறையாக

அரைகுறையாக

தொலைக்காட்சி தொலைவில் காட்சியளித்தபோது

பெண்ணொருத்தி தொலைந்துபோக வைக்கும்

காட்சி கொடுத்தாள் தொலைக்காட்சியில் சற்று
அரைகுறையாக .

**2**

# கால செக்குமாடு

கால செக்குமாடு

வட்டமாக முள் ஒன்று சுற்றிவரலாம் என விதித்தவன்

கொஞ்சம் மெதுவாக விருப்பத்துக்கு

ஏதுவாக சுற்று என கட்டளையிடவில்லைபோலும் காலதாமதம் .

**3**

# மண்வாசனை

மண்வாசனை

ஏழுவண்ண வானவில்லோ மழை அம்பெய்தி
தாக்குகிறது

பாவம் குறிதவறி செம்மண்ணை தாக்கி

சவ்வாது பரப்புறகிறது தவறாது கேட்டால் மழையாம்

**4**

# காகித பற்றாக்குறை

காகித பற்றாக்குறை

கண்கள் இரண்டு ... காதுகள் இரண்டு

வாய் ஒன்று . மூக்கு ஒன்று .

இதயம் ஒன்று .

கை இரண்டு . கால் இரண்டு .

சிறுநீரகம் கூட இரண்டு .

ஆனால் எனக்கு மட்டும் துணைக்கு பெண் இல்லை என்கிறது

சமூகம் கேட்டால் வேலை இல்லையாம்

காந்தி படம் போட்ட காகிதம் இல்லையாம் ..

**5**

# சமீபத்திய காதல்

சமீபத்திய காதல்

நான் உன் கண்ணை காதலிக்கிறேன் என
சொல்லவில்லை .

நான் உன் செவ்விதழ்களை காதலிக்கிறேன் எனவும்
சொல்லவில்லை .

நான் உன் உடலையும் காதலிக்கிறேன் எனவும்
சொல்லவில்லை .

ஆனால் நான் உன்னை காதலிக்கிறேன் என்று
சொன்னேன்

ஆனால் நீயோ என்னிடம் உள்ள காந்திபடம் போட்ட

காகிதங்களை காதலிக்கிறேன் என சொல்லியது ஏனோ
!

**6**

# தினக்கருவிழி

தினக்கருவிழி

செய்திதாள்கள் ஆயிரம் இருந்தும் என் பெயர் வரும்
ஒரே செய்திதாள் உன் கருவிழிகள் .

விலை என்னவோ ?

இலவச இணைப்பு உண்டோ ?

சிறப்பு இதழ்கள் உண்டோ ?

7

# கோபம்

கோபம்

ஆழிக்கடல்போல நீண்டு போகவா

சுழல் போல சுற்றவா

மழை போல கொட்டவா

அருவி போல சிதறவா

ஆறு போல ஓடவா

கொள்கலனுக்குள் அடங்கிபோகவா என
கேட்டுக்கொண்டே

கதிரவனின் கோபத்தில் ஆவியாகிறது தண்ணீர் .

8

# நவீன பாப்பா பாட்டு

நவீன பாப்பா பாட்டு

காலை எழுந்தவுடன் பேஸ்புக்கு – பின்பு

கனிவு கொடுக்கும் நல்ல வாட்ஸ்அப்

மாலை முழுவதும் டிவிட்டர் என
வழக்கப்படுத்திகொள்ளு பாப்பா

லைக் செய்யக்கூடாது பாப்பா – என்றும்

ஷேர் செய்யலாகாது பாப்பா !

பேஸ்புக் நமக்கு துணை பாப்பா – ஒரு தீங்கும்
வரமாட்டாது பாப்பா

பெண்களுடன் சாட் செய்பவரை கண்டால் – நாம்
பயம்கொள்ளலாகாது பாப்பா !

மோதி மிதித்துவிடு பாப்பா !- அவர்

முகத்தில் உமிழ்ந்துவிடு பாப்பா

தேர்வு நெருங்கி வந்த போதும் நாம் படித்தல்ஆகாது
பாப்பா !

அன்பு மிகுந்த பிட்டுண்டு – துன்பம் அத்தனையும்
போக்கிடும் பாப்பா

( இதுக்கு மேலயும் சொன்னா ரொம்ப தீவிரமாக போகும்
அதனால் நிறுத்திக்கொள்கிறேன் .)

9

# வர்க்கம்

வர்க்கம்

உழைக்கும் மக்கள் பசி தீரவேண்டும் .

பணத்தின் மோகவிசை தீரவேண்டும் .

முதலாளிகளின் சுரண்டல் தீரவேண்டும் .

குற்றதொழிலோர்கள் திருந்தவேண்டும் .

பசி பொதுவெனில் உணவும் பொதுவாகவேண்டும் .

தீருமா வர்க்க போராட்டம் ?

**10**

# மது வேண்டாம்

மது வேண்டாம்

மது வேண்டாம் ... ஒருவேளை மனைவி வாழவேண்டுமானால் ..

மது வேண்டாம் .. பிச்சைகார கோலம் வேண்டாமென்றால் .

மது வேண்டாம் .. காசு கையில் நிலைத்து தங்க வேண்டுமென்றால் .

மது வேண்டாம் .. நீடித்த ஆரோக்கிய வாழ்வு வேண்டுமென்றால் .

மது வேண்டாம் மது கடையும் வேண்டாம் . மதுபான அரசும் வேண்டாம் .. குடிக்காதே

**11**

# 1947

**1947**

எது சுதந்திரம் ? காவல்துறைக்கு அஞ்சி இருப்பதா

எது சுதந்திரம் ? விபத்தில் உதவாமல் இருப்பதா

எது சுதந்திரம் ? பெண்களை அடக்கி ஆள்வதா

எது சுதந்திரம் ? குழந்தைகளை பிச்சை எடுக்க வைப்பதா ?

எது சுதந்திரம் ? அந்நிய நிறுவனங்களில் அடிமைபடுவதா

எது சுதந்திரம் ? அநீதியை வேடிக்கை பார்ப்பதா

எது சுதந்திரம் ?

**12**

# சென்னை

சென்னை

கூவம் ஒடுகிறது .

ஓடட்டும்

ஆனால் கூடவே கண்ணீர் ஏன் ஓடுகிறது ?

**13**

# மரணமாஸ்

மரணமாஸ்

காசு இருந்தால் மாஸ் என சொல்லுபவருக்கு

தெரியவில்லை ஏற்கனவே

மனிதனின் மாஸ் அதிகமென

**14**

# கோடி வாழ்த்துகள்

கோடி வாழ்த்துகள்

புத்தாடை செல்ப்பி என் லைக்குகள் உண்டு .

உன் வாழ்த்து டிவிட் என் ஆர் . டி உண்டு .

உன் தலைவர் படம் என் பாராட்டுக்கள் உண்டு .

என் வாழ்க்கை கொஞ்சம் வாழவிடுங்களேன் .

**15**

# இரண்டு பொண்டாட்டிக்காரன்

இரண்டு பொண்டாட்டிக்காரன்

கொட்டுகிறது பாறை வழியாகவும் ,

கொட்டுகிறது ஆகாயத்திலிருந்தும் ,

மனிதன் நனைகிறான் ,

மனிதன் நனைகிறான் ,

பாறைநீர் தழுவுகிறது மனிதனை ,

ஆகாயகண்ணீர் தழுவுகிறது மனிதனை .

என்ன மனிதனுக்கும் இரண்டு இயற்கை
பொண்டாட்டியா ?

16

# செய்யப்பட்ட செய்திகள்

செய்யப்பட்ட செய்திகள்

செய்தி தாள்களை தாளில் செய்வார்களா இல்லை

செய்திகளில் செய்வார்களா என்ற சந்தேகம் .

தாளுக்கு விலையா

அல்ல கொலைக்கு விலையா

**17**

# புத்தகம் பார்க்கப்படுகிறது

புத்தகம் பார்க்கப்படுகிறது

படிக்கிறேன் என்று சொல்லிக்கொண்டு

புத்தகத்தை வெறிக்க வெறிக்க பார்கிறார்கள்

அப்படிதான் அவளையும் பார்த்தார்கள் .

அப்படி எனில் அவள் ஒரு புத்தகமா

எந்த நூலகத்தில் அவள் கிடைப்பாள்

**18**

# கதிரவனின் சூடு

கதிரவனின் சூடு

அவள் கண் எதிரே தெரிகிறேன் ஆனால் அவளுக்கு எதிராக நான் இருந்ததில்லை .

சூரியனுக்கு எதிரே தெரிகிறேன்

ஆனால் சூரியனுக்கு எதிராக நான் தவறாமல் இருந்திருக்கிறேன் .

ஏனெனில்

என்னா வெயில்டா

**19**

# பெண்

பெண்

கருப்பு கருவிழிகள்

சிவப்பு உதடுகள்

என்ன நீ தான் திராவிட இயக்க கொடியோ ?

**20**

# கண்ணுவைக்காதீர்

கண்ணுவைக்காதீர்

தவறான பாதையில் செல்கிறாய் என்கிறார்கள் .

மன்னிக்கவும் நீங்கள் உங்கள் தவறான பாதையில் செல்லுங்கள் .

இது என் பாதை . என் பாதையை பார்க்காதீர்கள் .

**21**

# கணிதம் வராது

கணிதம் வராது

இன பெருக்கம் தானே ..

ஒன்று பெருக்கல் ஒன்று இரண்டு .

நீ ஏன் ஒன்று என சொல்கிறாய் !

கணக்கு வாய்ப்பாடு தெரியாதா

**22**

# நடிகன்

நடிகன்

நான் பொல்லாதவன்

சரி இருக்கட்டும் .

அன்புக்கு நான் அடிமை

சரி இருக்கட்டும் .

நான் ராஜாவாக போகிறேன் .

சரி இருக்கட்டும் .

சரி நீ மனிதன் தானா ?

ஆம் மனிதன் தான் .

படம் பார்க்கவில்லையா

**23**

# அழகான தமிழ்ப்பெயர்

அழகான தமிழ்ப்பெயர்

பெயர் தெரியாதவன் என பெயர்
வைத்துக்கொள்ளலாம்

என பரிந்துரைத்தேன் பெயர் இடும் விழா ஒன்றில்

உடனே எனக்கு அவர் பெயர் நியாபகம் வந்தது

அவருக்கு நான் இட்ட பெயர் பெயர் தெரியாதவன் .

உடனே பெயர் தெரியாதவனுக்கு பிறந்தவன் என
வைத்துக்கொள்ளுங்கள் என்றேன் .

ஊரே தூற்றுகிறதே ..

பெயர் தெரியாதவன் என்பதும் ஒரு அழகான தமிழ்
பெயர் தானே

**24**

# படித்து தைத்துவிட்டாயோ

படித்து தைத்துவிட்டாயோ

தேதிகள் கிழிக்கப்படும் போது தான்

தெரிகிறது எதுவும் கிழிக்கப்படவில்லை

என்னால் என்பதும்

**25**

# கொட்டுகிறது

கொட்டுகிறது

தண்ணீர் குழாய் திறக்கப்பட்ட உடன் தண்ணீர் கொட்டுகிறது

நானும் கண்ணை திறந்து வைத்திருக்கிறேன்

ஏதாவது கொட்டட்டும் என்று

ஆனால் குளவி கொட்டியது

**26**

# நெடுஞ்சாலை நிலவு

நெடுஞ்சாலை நிலவு

தூரத்தில் ஒளிரும் நிலவு போல தான்

சில சமயங்களில் ஒளிர்கிறது நள்ளிரவு மஞ்சள் நிற தெருவிளக்கும்

கருப்பு ஆகாய பின்னணியில்

மின்வெட்டுநேரத்தில் அமாவாசையாக

மற்ற நேரங்களில் பௌர்ணமியாக

**27**

# தீயணைக்கும்வண்டி நான்கு

தீயணைக்கும்வண்டி நான்கு

விளக்கும் எரிகிறது .

வீடும் எரிகிறது

வயிறும் எரிகிறது .

எதைத்தான் முதலில் அணைப்பது

28

# சாக விருப்பம் இல்லை

சாக விருப்பம் இல்லை

பணமில்லா வாழ்க்கையை விட பிணமாக இருத்தல் நலம்

எனில் நான் உயிருள்ள பிணமாய் இருந்துவிடுகிறேன் .

சாவதற்கு விருப்பம் இல்லை .

**29**

# வாகனம்

வாகனம்

காதலர்களாகும் முன் என் சைக்கிள் உன்னை பின்தொடர்ந்தது

காதலர்கள் ஆன பின் என் எண்ணம் உன்னை பின்தொடர்கிறது .

இரண்டும் வாகனம் தான் .

இரண்டிற்கும் பெட்ரோல் தேவையில்லை .

ஆனால் நீ தேவை .

**30**

# ஆகாய கொட்டல்

ஆகாய கொட்டல்

மழை சில சமயங்களில் கொட்டுகிறது

தலையில் வெளியே போகாத மனிதனே என

**31**

# குடியுடன்பயணம்

குடியுடன்பயணம்

அடை மழையில் தெருவில் கடை

பேருந்து நடையில் தண்ணீர் சாலை

கண்ணீர் மனிதர்களின் பயணம்

சிலர் அரசாங்க தண்ணீருடன்

**32**

# கண்ணாமூச்சு ரே ரே

கண்ணாமூச்சு ரே ரே

எழுதலாமே என எண்ணும் போது

எழுத்துகள் தோன்றி மறைகிறது கண்ணாமூச்சி சிறுவனை போல .

எனக்கு விளையாட விருப்பம் இல்லை

ஆனால் அவை விளையாட மறுப்பதில்லை . வெறுமையாக வெளிப்பட்டு மகிழ்கிறது .

எழுத்துகள் இன்னும் சிறுவர்கள் தான் போல

**33**

# அவசரம்

அவசரம்

மழைத்துளி வானில் இருந்து அதிவேகமாக பயணிக்கிறது .

சில சமயங்களில் கேட்டுக்கொள்வேன் மழையே

உனக்கென்ன அவசரம்

மண் மீது முத்தமிடுவதற்கா

அல்ல பயிர்களின் கண்ணீர் துடைக்கவா

**34**

# தேடுவார்கள்

தேடுவார்கள்

இந்த மழை ரொம்ப நேரமாக பூமியில் தங்கியிருக்கிறது .

உன்னை வீட்டில் தேடமாட்டார்களா

இப்போது நீ போகலாம்

**35**

# பதில்

பதில்

நல்ல மாடுக்கு ஒரு சூடு

இருக்கட்டும்

கெட்ட மாடுக்கு எத்தனை சூடு

இரண்டா

**36**

# பெண்ஜீப்ரா

பெண்ஜீப்ரா

கண்ணால் கூட்டி

உதட்டால் வகுத்து

நிழலால் கழித்து போகும் பெண்ணை விட

என்ன குழப்பமான கணிதம் இருந்துவிடமுடியும் .

**37**

# வெற்றுக்கேள்வி

வெற்றுக்கேள்வி

இது அதுவின் தொடக்கம் .

அது அதுவின் அதுவுடைய தொடக்கம்

இப்படி இருக்க அவர்கள் எப்படி இப்படி என
வினவுவார்கள் பாருங்களேன்

வேடிக்கையிலும் ஒரு வெற்றுவேடிக்கையாக இருக்கும்

**38**

# முகவரி

முகவரி

பிரபஞ்சத்தில் பால்வழி அண்டம்

பால்வழி அண்டத்தில் சூரிய குடும்பம்

சூரிய குடும்பத்தில் பூமி

பூமியில் கண்டம்

கண்டத்தில் நாடு

நாட்டில் மாநிலம்

மாநிலத்தில் மாவட்டம்

மாவட்டத்தில் ஊர்

ஊரில் நான்

என்னுள் அவள்

அவளின் உள்ளே என் வாரிசு

என இவ்வளவு பெரிய அடையாளம் இருக்க

இவர்கள் யார் எனக்கு அடையாளம் இல்லை என சொல்ல

**39**

# உம்ஆல்

உம்ஆல்

உம்மை விட ஆல் நல்லது .

தெரியும்

வலிக்கும்

விழிக்கும்

நடக்கும்

என்பதைவிட

தெரிந்தால்

வலித்தால்

விழித்தால்

நடந்தால்

என்பது எவ்வளவு சுவாரசியமானது .

## 40

# சமூக சேவகன்

சமூக சேவகன்

தீயதை பார்காதே குருடனாகிவிட்டேன்

தீயதை பேசாதே ஊமையாகிவிட்டேன்

தீயதை கேட்காதே செவிடனாகிவிட்டேன்

தீயதை நினைக்காதே நல்லவனாகிவிட்டேன் .

கொஞ்சம் நான் எங்கே இருக்கிறேன் என்று எனக்கு புரியவையுங்களேன்

எனக்கு கண் , காது , வாய் வேலைசெய்யாது .

**41**

# பாயும் சுண்ணாம்பு

பாயும் சுண்ணாம்பு

நான் கடைசி பென்ச்

நீ முதல் பென்ச்

என் பார்வை பாயும் முதல் பென்ச்

பதிலுக்கு சாக்பீஸ் பாய்கிறது

கடைசி பென்ச்க்கு ஆசிரியரிடம் இருந்து

**42**

# பகல் கனவு

பகல் கனவு

நள்ளிரவு விழித்திருந்துவிட்டு

பகலில் தூங்கி வழிகிறது கனவுகள் .

கனவுகளே பகலில் நீங்கள் வரலாம்

**43**

# நகம்

நகம்

நகத்தை கடிப்பதை போல

என்னையும் கடித்தால்

கொஞ்சம் கொஞ்சலும் நலமே

**44**

# தவறி ஒரு முத்தம்

தவறி ஒரு முத்தம்

கால்தவறி இடறி விழுந்தாய்

தவறி உன் முத்தம் என்மீது சித்தமானது

நீ கொஞ்சம் அனுமதி வழங்கினால் நானும் இடறி விழுகிறேனே

**45**

# தண்ணீர் சிலை

தண்ணீர் சிலை

அலங்காரம் செய்யப்பட்ட சாமி சிலைபோல
தெரிந்தாலும்

நீ சிலையல்ல பெண்ணே

மாறாக அலையாக அடிக்கிறாயே

நான் தீண்டும் போது சிலையாக இருந்துவிடேன்

**46**

# அந்த சுவிட்ச் எதுக்கு

அந்த சுவிட்ச் எதுக்கு

நான்கு சுவிட்ச் இருக்கிறது .

ஒன்று மின்விசிறிக்கு

இன்னொன்று மின்விளக்குக்கு

மற்றொன்று தொலைக்காட்சிக்கு

இன்னொன்று இருக்கிறதே

அது எதுக்கு ஒரு வேளை எனக்கா

சுவிட்ச் போட்டுத்தான் பாருங்களேன்

47

# தடவலும் அலுப்பும்

தடவலும் அலுப்பும்

கடல்அலை கரையை தடவுகிறது

காலை மதியம் மாலை இரவு நள்ளிரவு அதிகாலை என
.

மறுநாளும் இதேபோல தடவுகிறது

காலை மதியம் மாலை இரவு நள்ளிரவு அதிகாலை என
.

ஒரு வேளை கடலுக்கு போர் அடிக்காதா என்ன

## 48

# மேக கேமரா 99 மெகாபிக்ஸல்

கொஞ்சம் இரு ஒரு புகைப்படம் என சொன்ன பின்பும் மறைந்து போன வானவில்லே உன்னை பழிக்கு பழிவாங்குகிறேன் பார் என கூறிக்கொண்டே மின்னல் கேமராவில் முறைத்து கொண்டே போஸ் கொடுத்தேன்

**49**

# நோபல் பரிசு

அவனுக்கு நோபல் பரிசு
இவனுக்கு புக்கர் பரிசு
இன்னொருவனுக்கு பாரத ரத்னா
எனக்கு ஆறுதல் பரிசாவது கொடுங்களேன் கொஞ்சம்
பார்த்திட்டு தந்துவிடுகிறேனே

**50**

# வந்ததில்லை

விகடனில் வந்ததில்லை
குமுதம்த்தில் வந்ததில்லை
கல்கியில் வந்ததில்லை
ஆனால் என் யோசனையில் வந்திருக்கிறது நான்
எழுதிய கவிதைகள்



ஏதோவும்

# ஏதாவதும்



நேதாஜிதாசன்

கவிதைகள்